மலர் 15 இதழ் 340 NAVAMANI (Tamil Daily) MADRAS 4 பக்கம் 25 காசு
Regd M No. 1897 / Phone No. 76190 76191




# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி
சென்னை 24-8-75 ஞாயிறு வெளியூர் 25-8-75 திங்கள்



## பம்பாயிலிருந்து ஓடிவந்த
# அந்நிய செலாவணி மோசடிக் கும்பல்
## தமிழ்நாட்டில் அதிகாரிகள் தேடுகிறார்கள்

பம்பாய், ஆக. 24—அதிகாரிகள் தீவிர நடவடிக்கை எடுக்கிறார்கள் என்று தெரிந்ததும் பம்பாயிலிருந்து அந்நிய செலாவணி மோசடிக் கும்பலைச் சேர்ந்த 8 பிரபல புள்ளிகள் தப்பி ஓடினர். அவர்கள் கேரளாவிலும், தமிழ்நாட்டிலும் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள்.

இப்பிரபல புள்ளிகளைப் பிடிக்க அதிகாரிகள் தீவிர நடவடிக்கை எடுத்துள்ளனர்.

இத்தகவலை மத்திய அரசின் நடவடிக்கை துறையின் துணை டைரக்டரான ஆர். சுவாமிநாதன் தெரிவித்தார்.

அன்னியச் செலாவணி தில்லுமுல்லுகளில் ஈடுபட்டு, தாங்கள் பெறும் அன்னியச் செலாவணிக்கு ஈடாக இங்குள்ளவர்களுக்குப் பணம் அளிக்கும் கும்பல் கையாளும் புதிய முறை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாக அவர் தெரிவித்தார்.

பம்பாயிலிருந்து பாங்கு டிராப்ட்கள் வடிவில் நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் ஏராளமான பணம் அனுப்பப்படுவதாக சுவாமிநாதன் தெரிவித்தார்.

### ரூ. 10 லட்சத்துக்கு டிராப்ட்

உத்தரப் பிரதேசத்தில் உள்ள ஒரு பெரிய நகரில் உள்ள ஒருநபருக்கு சமீபத்தில் பம்பாயிலிருந்து பாங்கு டிராப்ட் மூலம் ரூ. 10 லட்சம் அனுப்பப்பட்டதாக அவர் கூறினார். இதுபோல பல நகரங்களுக்கு ரூ. 20 லட்சம் டிராப்ட் மூலம் அனுப்பப்பட்டது.

ஆனால் இந்த டிராப்ட்களைப் பெறும நபர்களின் பெயர்களும், அனுப்பியவர்களின் பெயர்களும் போலியானவை என்று பின்னர் கண்டுபிடிக்கப்பட்டது.

பல்வேறு பாங்குகளில் இவ்விதம டிராப்டுகள் எடுக்கப்படுகின்றன. அன்னியச் செலாவணி மோசடிக் கும்பல் இவ்விதம பணம் அனுப்புவதைத் தடுக்க பாங்குகளின் உதவி நாடப்பட்டுள்ளதாக அவர் தெரிவித்தார்.

### கள்ளப்பணமா ?

வெள்ளிக்கட்டி வாங்குவது போன்ற காரியங்களுக்காக ஒருவேளை கறுப்புப்பணம் இப்படி ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்கு அனுப்பப்பட்டு வரலாம் என்று தாங்கள் சந்தேகிப்பதாக அவர் தெரிவித்தார்.

இப்பணம் உண்மையில் யாருக்கு அனுப்பபபடுகிறது என்பதைக் கண்டுபிடிக்க எல்லா முயற்சிகளும் செய்யப்படுவதாக அவர் சொன்னார்.

### போலிப் பெயர்

ஒரு சமயத்தில் பாங்கு டிராப்ட் எடுத்தவர் "அமர்நாத்" என்று கையெழுத்திட்டிருந்தார். இன்னொருவர் "ஜம்போ" என்று கையெழுத்திட்டிருந்தார். இவை எலலாம் போலிப் பெயர்களே என்றார் சுவாமிநாதன்.

### தமிழ்நாட்டில் தலைமறைவு

பம்பாயில் அன்னியச்செலாவணி மோசடியில் ஈடுபட்டு வந்த 8 பிரபல புள்ளிகள் அங்கிருந்து தப்பி கேரளாவிலும் தமிழ் நாட்டிலும் தங்களுடைய சொந்த ஊர்களில் தலைமறைவாகியுள்ளனர். அவர்களைப் பிடிக்க முயற்சி நடக்கிறது என்றும் அவர் சொன்னார்.

### அதிகாரி ஓட்டம்

தெற்கு பம்பாயில் பாங்கு அதிகாரி ஒருவர் அன்னியச் செலாவணி மோசடி கும்பலுக்கு உதவுவதாக சந்தேகிக்கப்பட்டது. அவரைப்பற்றி விசாரிக்க ஆரம்பித்ததும் அந்த அதிகாரி வேலையை ராஜினாமா செய்து விட்டு பாஹ்ரைன் நாட்டுக்குத் தப்பி ஓடி வேறு பாங்கில் வேலை பெற்று விட்டார் என்றும் சுவாமிநாதன் தெரிவித்தார்.

---

முதல்வர்களுக்கு

## மந்திரி ஜெகஜீவன் கடிதம்

புதுடெல்லி, ஆக. 24—கிராமப்புற மக்களுக்கு கடன் நிவாரணம் அளிக்கப்பட்டதைத்தொடர்ந்து மேற்கொண்டு என்ன நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும் என்பது பற்றி மாநில முதல்வர்களுக்கு மத்திய விவசாய மந்திரி ஜெகஜீவன்ராம் கடிதம் எழுதியுள்ளார்.

---

## ஊழியரிடம் ஆஸ்பத்திரி மருந்து: தம்பதி கைது

தஞ்சாவூர், ஆக. 24—அரசு ஆஸ்பத்திரிக்கு சொந்தமான ரூ. 8 ஆயிரம் மதிப்புடைய மருந்துகளை சட்டவிரோதமாக வைத்திருந்ததாக ஒரு தமபதியினரை போலீசார் கைது செய்தனர்.

கணவன் மருந்துக்காப்பாளராகவும், மனைவி உதவி நர்சாகவும் அதே ஆஸ்பத்திரியில் வேலை பார்ப்பவர்களாம்.

போலீசார் மேற்கொண்டு புலன் விசாரித்து வருகிறார்கள்.

---

## பெட்டியை தூக்கி ஓடிய 'காக்காவலி' கைது

சென்னை, ஆக. 24—ரெயில் பயணி ஒருவரின் பெட்டியை தூக்கிக் கொண்டு ஓடிய காக்காவலி என்பவரை போலீசார் கைது செய்தனர்.

நேற்று முன்தினம காலை சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் வந்து நின்ற வண்டியில் ஒரு பிரயாணி எழுந்திருக்காமல் தூங்கிக்கொண்டிருந்தார். இதைக் கவனித்த காக்காவலி என்கிற பகத்சிங் என்பவரும் பாபு என்பவரும் அந்தப் பயணியின் இரண்டு சூட் கேஸ்களை எடுத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தனராம். உடனே ரெயில்வே சப்-இன்ஸ்பெக்டர் பத்மநாபன் அந்த இருவரையும் கைது செய்து ரிமாண்டில் வைத்தார். பெட்டியில் ரூ 600 மதிப்புடைய துணிகளும் சாமான்களும் இருந்ததாக கூறப்படுகிறது.

---

## தேடப்பட்ட ஸ்பிரிட் கடைக்காரர் கைது

சென்னை, ஆக. 24—போலீசாரால் தேடப்பட்டுவந்த ராஜவேலு எனனும் ஸ்பிரிட் கடைக்காரர் நேற்றிரவு கைது செய்யப்பட்டு மத்தியசிறைக்கு அனுப்பப்பட்டார்.

அவர் கோடம்பாக்கத்தில் ஸ்பிரிட் கடை நடத்தி வருபவர். தேடப்பட்டு வந்த அவரை கோடம்பாக்கம் போலீஸ் இன்ஸ்பெக்டர் சோமசுந்தரம் கைது செய்தார். அப்போது ராஜவேலு குடிபோதையில் இருந்ததாக கூறப்படுகிறது.

---

வங்காள தேஷ்

## புதிய அரசுக்கு ரஷியா அங்கீகாரம்

கல்கத்தா ஆக. 24—வங்காளதேஷின் புதிய அரசை ரஷியா அங்கீகரித்து விட்டது.

ஜனாதிபதி அகமதை ரஷிய தூதர் நேற்று சந்தித்து ரஷிய அங்கீகாரத்தை தெரிவித்ததாக வங்காளதேஷ் ரேடியோ அறிவித்தது.

---

## விலைவாசியை கண்காணிக்க இளைஞர் காங்கிரஸ் படை

சென்னை, ஆக 24—புதுகாங்கிரசை சேர்ந்த இளைஞர் காங்கிரஸ் பிரிவினரும், தேசிய மாணவர் பிரிவினரும், கடைகளுக்குச் சென்று விலைப்பட்டியல் உள்ளதா என்றும், பொருட்கள் நியாய விலையில் விற்கப்படுகிறதா என்றும் கண்காணிப்பர் என்று இந்திய தேசிய மாணவர் சங்க மாநில அமைப்பாளரும் தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் செயற்குழு உறுப்பினருமான இரா. ஜெயசந்திரன் அறிவித்துள்ளார்.

---

இந்தியா — இலங்கை இடையே

## கடலுக்கடியில் 22 மைல் நீள மின் கம்பி அமைப்பு

புதுடெல்லி, ஆக. 24— இந்தியா — இலங்கை இடையே கடலுக்கு அடியில் 22 மைல் நீளத்துக்கு மின்சாரக் கம்பியை அமைக்கத் திட்டம் உள்ளது.

இத்திட்டத்துக்குச் சுமார் ரூ. 30 கோடி முதல் ரூ. 40 கோடி வரை செலவாகும் என்று மதிப்பிடப் படுகிறது.

இலங்கை—இந்தியா இடையில் பொது மின்சார இணைப்புத் திட்டத்தை உருவாக்குவதற்காக இவ்விதம் கடலுக்கடியில் மின்சார கம்பியை (கேபிள்) போடுவது பற்றி ஆராயப்பட்டு வருகிறது.

இவ்வித இணைப்பு ஏற்பட்டால் ஒருநாடு மற்றொரு நாட்டுக்கு மின்சாரத்தை அளித்து உதவிக்கொள்ள முடியும்.

இரு நாடுகளையும் சேர்ந்த மின்சார நிபுணர்கள் இவ்விதம் கடலுக்கடியில் மின்சார கேபிளை அமைப்பது சம்பந்தப்பட்ட தொழில் நுட்ப பொருளாதார அமசங்களை 3 மாத காலத்துக்குள் ஆராய்ந்து முடிப்பர்.

இதற்கிடையே இருநாடுகளையும்சேர்ந்தகோஷ்டியினர் கடந்த 19-ந் தேதியிலிருந்து இத்திட்டம்பற்றி விவாதித்து வருகின்றனர்.

இரு நாடுகளின் தூதுகோஷ்டியினரும் அடுத்து பல்வேறு இடங்களுக்குச் சென்று பார்வையிடுவர். அவர்கள் ஏற்கெனவே ஹரித்துவாரில் உள்ள கனரக மின்சார தொழிற்சாலைக்கு விஜயம் செய்துள்ளனர். அடுத்து சென்னை, பெங்களூர் மதுரை ஆகிய இடங்களுக்கு விஜயம் செய்வர்.

உத்தேச கடலடி மின்சார கேபிளை இருநாடுகளும் கூட்டாக அமைக்கும்.

---

## தஞ்சை பகுதியில் கன மழை

தஞ்சை, ஆக. 24 - காவிரி டெல்டா பகுதிகளில் 3-வது நாளாக நேற்றும் கனமழை பெய்தது.

இதனல் கும்பகோணத்தில் 800 ஹெக்டார் குறுவை நெற்பயிர் தண்ணீரில் மூழ்கிவிட்டதாகக் கூறப்படுகிறது.

சில இடங்களில் நாற்று நடவு வேலைகள் பாதிக்கப்பட்டிருக்கிறது.

---

சொத்து மதிப்பை காட்ட

## காங்கிரஸ் உறுப்பினருக்கு கெடு நீடிப்பு

புதுடெல்லி, ஆக 24—காங்கிரஸ்காரர்கள் தங்களது சொத்து மதிப்பை தெரிவிப்பதற்கான காலகெடு நீடிக்கப்பட்டிருக்கிறது.

மந்திரிகள், எம். பி. க்கள், பிரமுகர்கள் ஆகஸ்ட் 25-ம் தேதிக்குள் சொத்து மதிப்பை தெரிவிக்க வேண்டும் என்று காங்கிரஸ் தலைவர் பரூவா அறிவித்துள்ளார்.

---

## ரூ. 60 கோடி செலவில்
# ஏழைகளுக்கு இலவச சட்ட உதவி திட்டம்: மத்திய அரசு பரிசீலனை

புதுடெல்லி, ஆக, 24—ஏழைகளுக்கு இலவச சட்ட உதவி அளிப்பது சம்பந்தமாக ஒரு திட்டத்தை மத்திய அரசு பரிசீலித்துவருகிறது. இதற்கு ரூ. 60 கோடி செலவாகும் என்று கருதப்படுகிறது.

இந்தத் திட்டத்துக்கு மத்திய அரசு இறுதி வடிவம் கொடுத்து வருகிறது. இத்திட்டத்தின்படி ஏழைகளுக்கு இலவச சட்ட உதவி தர வேண்டியது அரசாங்கத்தின் கடமையாகிறது.

திட்டம் பற்றி மத்திய அரசு மாநில அரசுகளுடன் கலந்து பேசி வருகிறது. மாநில அரசுகளின் கருத்து அறிந்த பிறகு திட்டம அறிவிக்கப்படும்.

ஏழைகளுக்கு சட்ட உதவி யளிப்பது சம்பந்தமாக கிருஷ்ணய்யர் கமிட்டி 275 பக்கம் கொண்ட அறிக்கை ஒன்றை தயாரித்திருக்கிறது. இந்த அறிக்கையின் அடிப்படையிலேயே புதிய திட்டம் தயாரிக்கப்படுகிறது.

கிருஷ்ணய்யர் கமிட்டி அறிக்கை சம்பந்தமாக கருத்து தறிவிக்குமாறு மாநில அரசுகளை மத்திய சட்ட மந்திரி கோகலே கேட்டுக்கொண்டுள்ளார்.

ராஜஸ்தான் மாநில அரசு ஏற்கனவே இப்படி ஒரு திட்டத்தை செயல்படுத்திவருகிறது. இதற்காக ரூ. 5 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

அனேகமாக எல்லா மாநில அரசுகளும் திட்டத்தை வரவேற்கின்றன, ஆனல் இதற்கு மத்திய அரசு நிதி உதவி தர வேண்டும் என்று எதிர்பார்க்கின்றன.

இப்போது இலவச சட்ட உதவியளிக்கும் பல பொது நிறுவனங்கள் உள்ளன, ஆனல் இவைகளால் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை என்று கருதப்படுகிறது.

### சட்ட மாணவர் உதவி

ஏழைகளுக்கு இலவச சட்ட உதவி அளிப்பதில் சட்டக் கல்லூரி மாணவர்களின் சேவையைப் பயன்படுத்தலாம் என்று கிருஷ்ணய்யர் கமிட்டி சிபாரிசு செய்துள்ளது.

இந்தியாவில் உள்ள 165 சட்ட கல்லூரிகளின் 1½ லட்சம் மாணவர்கள் படிக்கிறார்கள். ஆனல் இந்திய சட்டப்படி சட்ட மாணவர்கள் கோர்ட்டுகளில் வாதாட முடியாது. ஆயினும் தஸ்தாவேஜுகளை தயார் செய்வது போன்ற பணிகளில் வக்கீல்களுக்கு மாணவர் உதவி செய்யலாம் என்று கருதப்படுகிறது.

---

## கவர்னர் குஜராத் பயணம்

சென்னை, ஆக. 24—தமிழக கவர்னர் கே. கே. ஷா நேற்று தனது சொந்த மாநிலமான குஜராத்துக்குப் பயணமானர். குஜராத்தில் அவர் 10 நாட்கள் தங்கியிருப்பார். அவர் செப்டம்பர் 1-ந் தேதி சென்னை திரும்புவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

---

# மாணவருக்கு முன்பாக நிர்வாணமாக நின்ற ஆசிரியை

பாரிஸ், ஆக 20—பள்ளி ஆசிரியர் ஒருவரும் ஆசிரியை ஒருத்தியும பள்ளி மாணவர்களுக்கு முன்பாக ஆடைகளைக் கழற்றிப் போட்டுவிட்டு நிர்வாணக் கோலத்தில் நின்றனர்.

இதைக்கண்டதும் மாணவ, மாணவியர் திடுக்கிட்டு என்ன செய்வதென்று தெரியாமல் ஓட்டம் பிடித்து பெற்றோரிடம் தகவல் கூறினர்.

இந்த விசித்திர சம்பவம் பிரான்ஸ்நாட்டில் முல் ஹவுஸ் என்னுமிடத்தில் நடந்தது.

ஆசிரியர் பெயர் மார்ட்டின் வயது 37. ஆசிரியை பெயர் ஜாக்குவிஸ் வயது 29.

இந்த இருவரும் மாணவர் மாணவியரை உல்லாசமாக அழைத்துக் கொண்டு பழங்காலக் கோட்டையை அடுத்துள்ள ஒரு மைதானத்தின் வழியே சென்று கொண்டிருந்தனர். இருவருக்கும் திடீரென்று என்ன தோன்றியதோ தெரியவில்லை. ஆசிரியரும் ஆசிரியையும் ஆடைகளை அவிழ்த்துப் போட்டு நின்றனர்.

### மாணவ— மாணவியர் ஓட்டம்

அப்போது அவர்களுடன் 5 மாணவ மாணவியர் இருந்தனர். அவர்கள் அனைவரும் 14 முதல் 16 வயதுக்குட்பட்டவர்கள். தங்களுக்கு வழிகாட்டியாக நடந்துகொள்ள வேண்டிய ஆசிரியரும், ஆசிரியையும் நிர்வாண கோலத்தில் நிற்பதைக் கண்டு திக்பிரமை அடைந்த அவர்கள் அங்கிருந்து ஓட்டம் பிடித்தனர். நடந்த சம்பவத்தை தங்கள் பெற்றோரிடம் கூறினர்.

### வழக்கு

ஆசிரியர், ஆசிரியை இருவர் மீதும் கோர்ட்டில் வழக்குப் போடப்பட்டது.

அன்றைய தினம் உல்லாசப் பயணத்தின் போது அனைவரும் அதிகமாக உடை அணியவில்லை என்று அவர்கள் இருவரும் கூறினர்.

"ஏன் இருவரும் ஆடையைக் கழற்றிப் போட்டீர்கள்" என்றுகேட்டபோது, "ஏதோ அப்படி செய்யவேண்டும் என்று தோன்றியது" என்று பதிலளித்தனர்.

ஆசிரியர் மார்ட்டினுக்கு ரூ. 460 அபராதம் விதிக்கப்பட்டது. ஆசிரியைக்குரூ. 780 அபராதம விதிக்கப்பட்டது. மறுபடி குற்றம் புரிந்தால் சிறைத்தண்டனை அனுபவிக்க வேண்டும் என்று அவர்கள் எச்சரிக்கப்பட்டனர்.

---

# ஓயாமல் 100 மணி நேரம் சமையல் செய்தவர்

நியூயார்க், ஆக. 24—அமெரிக்காவில் 32 வயதான ஒருவர் இடைவிடாது 100 மணி நேரம் தொடர்ந்து சமையல் செய்து உலகில் புதிய சாதனையை ஏற்படுத்தியுள்ளார். அவர் பெயர் ஹெர்ரேரா.

இதற்கு முன்னர் ஒருவர் ஏற்படுத்திய 96 மணி நேர சாதனையை ஹெர்ரேரா முறியடித்தார்.

அவர் 100 மணி நேரம் இடைவிடாது சமையல் செய்தபோது நடுநடுவே ஒரு மணிக்கு ஒருதடவை 5 நிமிஷ நேரம் ஓய்வு எடுக்க அவர் அனுமதிக்கப்பட்டார். நின்றுகொண்டே சமையல் செய்ததில் கால் கடுத்ததால் கால்வலி நீங்க கடைசி சில மணி நேரத்தின்போது அவர் உப்பு நீரில் தனது கால்களை முக்கிக்கொண்டார். உலக சாதனை ஏற்படுத்தி முடிந்த பிறகு முதல்காரியமாக அவர் செய்தது என்ன ? தனக்கென சிற்றுண்டி தயாரித்து உட்கார்ந்து நிதானமாக அதைச் சாப்பிட்டார்.

## வானொலி

திங்கள், ஆகஸ்ட 25

சென்னை-1

(416.7 மீ)

காலை:

6-55 வந்தே மாதரம்
6-05 குறளமுதம்
6-10 வழிபாட்டிசை
6-30 செந்தளிர்
7-00 திங்கள் மலர்
7-05 தமிழ் மணம்
7-25 மீண்டும் கேட்போம்
7-35 மெல்லிசை
7-45 திரைகானம்
8-00 சிந்தனைத் துளிகள்
8-20 ரங்கநாயகி ராஜகோபாலன் —வீணை
9-30 ஒலிபரப்பு முடிவு

பகல்:

12-02 திரை கானம
12-35 அறிவிப்புகள்
12-50 திரைகானம்
1-00 பாமாலை—பித்துக்குளி முருகதாஸ், கே.பி.எஸ்.
1-30 ஜி. சந்தானம் — நாதஸ்வரம்
2-10 உயர்நிலைப்பள்ளிகளுக்கு
2-30 விஜயா நடராஜன் —பாட்டு
3-00 ஒலிபரப்பு முடிவு

மாலை

5-00 ஒலிக்கதிர்
5-10 ஜி. சந்தானம் — நாதஸ்வரம்
5-30 தொழிலாளர்களுக்கு
6-05 திரைகானம்
6-15 வாத்திய விருந்து
6-55 காவல்துறை செய்தி

இரவு

7-00 திரைகானம்
7-20 விவசாயிகளுக்கு
8-00 கெட்டிக்காரி— நாடகம்
8-15 நாத இன்பம் —வீணை
8-30 செய்தி மலர்
8-45 விஞ்ஞானம் —ஆங்கிலப் பேச்சு
8-55 மெல்லிசை மெட்டுக்கள்
9-15 செம்மங்குடி சீனிவாசய்யர் —பாட்டு
10-30 திரைகானம்
11-00 உலகச் செய்திகள்
11-05 வானிலை—முடிவு

சென்னை 2.

(211.3 மீ)

காலை

6-55 வந்தேமாதரம்
7-00 செய்திகள் (ஆங்கிலம்)
7-25 சித்தூர் கோபால கிருஷ்ணன்—வயலின்
9-00 சமஸ்கிருதத்தில் செய்தி
9-05 செய்திக் கடிதம் —ஆங்கிலம்
9-10 ஒலிபரப்பு முடிவு

பகல்

12-40 மேற்கத்திய இசை
1-00 செய்தி (ஆங்கிலம்)
1-05 மேற்கத்திய இசை
1-30 ஒலிபரப்பு முடிவு

மாலை

4-15 ஸ்போர்ட்ஸ்
5-50 திரை மெட்டுகள்
6-00 மேற்கத்திய இசை
6-50 & 7-15 இளைய பாரதம்
8-00 ஸ்போர்ட்ஸ்
8-05 இளையபாரதம்
8-15 நியூஸ் ரீல் (டெல்லி)
8-25 பூச்சரம்
9-15 ஸ்லாட்லைட்
9-30 தெலுங்கு நிகழ்ச்சி
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

திருச்சி

(319. மீ)

6-00 வந்தேமாதரம்
6-10 பாமாலை
6-25 நெறிவிளக்கம்
6-30 விவசாயிகளுக்கு
6-35 துதிப்பாடல்கள்
7-00 இலக்கியச்சோலை
7-25 வி. ரகுமார்—பாட்டு
8-20 ஒரு படத் திரையிசை
8-30 திண்ணியம் எஸ. கிருஷ்ணமூர்த்தி வயலின்
9-00 ஒலிபரப்பு முடிவு

பகல்:

12-02 திரைப்பட இசை
12-50 தேசபக்திப் பாடல்கள்
1-00 திண்ணியம் எஸ். கிருஷ்ணமூர்த்தி — வயலின்
2-10 உயர்நிலைப்பள்ளிகளுக்கு
2-30 நலம்பட வாழ்வோம்
2-35 வண்ணச்சுடர்
2-50 வானிலை — ஒலிபரப்பு முடிவு

மாலை

5-30 சென்னை அஞ்சல்
6-10 மெல்லிசை
6-40 கிராம சமுதாயம்
7-25 விவசாயிகளுக்கு
8-00 இளைய பாரதம்
8-15 மதுரை சரஸ்வதி லக்ஷ்மணன்—பாட்டு
10-30 ஒலிபரப்பு முடிவு

சென்னை 1-ல்தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை7-15, ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00. 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி: காலை 8-10 12-00, 2-00. 600, 9-00.

விவித பாரதி:

இரவு 9-15 'ஹவால் ஜெங்கு'

"ரட்சாபந்தன்" பண்டிகையை முன்னிட்டு டெல்லியில் ஜனாதிபதி பக்ருத்தீன் அலி அகமதுவுக்கு மணிக்கட்டில் ஒருரட்சையை ஒரு இளம் பெண் கட்டிய காட்சி.

## ஒரிசா வெள்ளம்: 15 பேர் பலி

புதுடெல்லி, ஆக. 24— இந்தியாவின் வடக்கு, கிழக்குப் பகுதிகளில் கடும் மழை பெய்துள்ளதால் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டுள்ளது.

ஒரிசாவில் மட்டும் இது வரை 13 பேர் உயிரிழந்ததாகக் கூறப்படுகிறது.

அசாம், பீகார், மத்தியபிரதேசம் ஆகிய மாநிலங்களிலும் பல பகுதிகள் வெள்ளத்தில் மூழ்கியுள்ளன.

பீகாரில் 100 கிராமங்களுக்குமேல் வெள்ளத்தில் சிக்கியுள்ளன. அசாமில் ரெயில் போக்குவரத்து பாதிக்கப்பட்டுள்ளது.

கடலில் மீன் பிடிக்கப் போன 54 மீனவர்களில் 33 பேர்களின் கதி தெரியவில்லை.

உத்தரப் பிரதேசத்தில் கடும் மழை காரணமாக ஒரு வீடு இடிந்து 7 பேர் உயிரோடு புதையுண்டதாகத் தெரிகிறது.

வெள்ளத்தில் பாதிக்கப்பட்ட மக்களைக் காப்பாற்ற ராணுவ படகுகளை அனுப்புமாறு பிரதமர் இந்திரா உத்தரவிட்டுள்ளார்.

### கல்வி மந்திரி அறிவிப்பு

## 50 சதவிகிதமார்க் வாங்கினல்தான் உயர்தரக் கல்வி

சென்னை, ஆக. 24— மாணவர்கள் 50 சதவிகித மார்க்குகள் வாங்கினல்தான் உயர்தர முன்னேற்றக் கல்வியில் சேர்த்துக் கொள்ளப்படுவர் என்று கல்வி மந்திரி நெடுஞ்செழியன் கூறினர்.

கல்வி அமைச்சரின் 56-வது பிறந்த நாள் விழா நேற்று சென்னையில் கொண்டாடப்பட்டது.

அதில் கலந்து கொண்டு பேசும் போது நெடுஞ்செழியன் மேற்கண்டவாறு கூறினர்.

15 வருஷக் கல்வி முறையை விரைவில்கொண்டுவருவதற்கு வசதியாக தமிழ்நாடு பள்ளிகளிலும்கல்லூரிகளிலும் பாடதிட்டங்களின் தரம உயர்த்தப்படும் என்றும நெடுஞ்செழியன் அறிவித்தார்,

பத்து ஆண்டு காலம் பள்ளி கல்வி முடிந்த பிறகு, மாணவர்கள் உழைப்பு அனுபவமும் நேரிடைப் பயிற்சியும் கொண்ட முறையையோ அல்லது உயர்தரக் கல்விப் பயிற்சியோ தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். உயர்தரக் கல்வி, இப்போது பிற இந்தியப் பல்கலைக் கழகங்களில் காணப்படுவதைவிட மிகவும் முன்னேற்றமான கல்வி முறையாக இருக்கும் என்றூர்.

புதிய கல்வி முறையை விளக்கிவைத்து அவர் பேசியதாவது:—

### சிபார்சுகள் ஒழிப்பு

உயர்தர முன்னேற்றக் கல்வித் துறையில் குறைந்தபட்சம 50 சதவிகிதம் மார்க்கு வாங்கிய மாணவர்களே சேர்த்துக் கொள்ளப்படுவர். இதைவிடக் குறைவான மார்க்கு வாங்கும் மாணவர்கள் தொழில் சார்புள்ள வகுப்புகளில் சேரலாம். இவ்வகையில், தரத்தின் அடிப்படையிலேயே மாணவர்களுக்கு இடம் தரப்படும்; சிபார்சுகள் ஒழிக்கப்படும்.

தொழில் சார்புள்ள கல்வி, அமெரிக்காவிலுள்ள சமுதாயக் கல்லூரி பாணியில் அமையும். இதற்கு இப்போது நல்ல பெயர் பரவியுள்ளது. சமூக மாறுதலுக்கும், சேவைக்கும் இணக்கமான கல்வி உறுதி செய்யப்படும்.

தமிழ் நாட்டில் உள்ள பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் போதனை நேரங்களை மாற்றலாம்.

காலையில் முதல் மாணவர் கோஷ்டிக்கும், மாலையில் இரண்டாவது மாணவர் கோஷ்டிக்கும் வகுப்புகள் நடத்தலாம். இதனல் மாணவர்களும், ஆசிரியர்களும் தெம்பாக இருக்கும்போது பாடங்கள் நடக்கும் வாய்ப்பு கிடைக்கும். இப்போது கொளுத்தும் வெய்யில் நேரத்தில், வியர்வை கொட்டும் நேரத்தில் பாடம் நடத்துவது அலுப்பும் சலிப்பும் தட்டுவதாக உள்ளது. இவ்வளவு பெரிய மாறுதல்களுக்கும், ஆசிரியர்களின் உற்சாகமும் ஒத்துழைப்பும் அவசியம் என்றூர் நெடுஞ்செழியன்.

### ஆந்திர மந்திரி

ஆந்திர கல்வி மந்திரி எம். வி. கிருஷ்ணராவ் பேசுகையில் திறமையல்லாத ஆசிரியர்கள் களையெடுப்புக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்றூர். நல்லாசிரியர்களுக்கான ஊக்குவிப்பு முறை வேண்டுமென்றூர். தமிழ்நாட்டில் தெலுங்கர்களுக்கு அதிகக் கல்வி வாய்ப்புகள் கோரினர்.

தமிழ்நாட்டிலுள்ள சிறந்த கல்லூரி முதல்வர்களுக்கு விருதுகள் அளிப்பதற்கான திட்டத்துக்கு 64 கல்லூரிகள் ரூ. 53,650 பண முடிப்பு தந்துள்ளன.

இவ்வாண்டு எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் 500 மார்க்குகளுக்கு மேல் வாங்கிய மாணவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன.

அமைச்சர் மன்னை நாராயணசாமி மற்றும்கல்வி துறை அதிகாரிகள் விழாவில் கலந்து கொண்டனர்.

## சிறைக் கைதிகளுக்கு புலால் உணவு வழங்க யோசனை

சென்னை, ஆக. 24—சிறையில் உள்ள கைதிகளுக்கு வாரம் ஒரு முறை புலால் உணவு போட வேண்டுமென அரசுக்கு சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.

சிறை இலாகா நிர்வாகம் குறித்து தோப்பூர் திருவேங்கடம் தலைமையிலான சட்டசபை மதிப்பீட்டுக் குழு இவ்வாறு சிபாரிசு செய்துள்ளது.

### ரொக்க உதவி

நீண்டகால சிறைத் தண்டனை அல்லது ஆயுள் தண்டனை பெற்ற கைதிகள், தண்டனைக் காலம் முடிவடைந்து வெளியே வரும் போது, அவர்கள் திருந்தி நல்வாழ்வு வாழ்வதற்கு வசதியாக, ஏதேனும் தொழில்துவங்க ரொக்கமாகவோ அல்லது பொருளாகவோ வழங்கப்பட வேண்டும் என்பது இந்தக் குழு செய்துள்ள இன்னொரு முக்கிய சிபாரிசு ஆகும்.

சிறைச்சாலைகளில் நவீன பம்பாய்க் கக்கூஸ் வசதி போதுமான தண்ணீர் வசதி போன்ற சுகாதார ஏற்பாடுகள் செய்து தரப்பட வேண்டும். சிறைச்சாலை வார்டன்களுக்கு எட்டு மணி நேர வேலை. சிறைகளுக்கு ஆண்டுக்கொருமுறை வெள்ளை அடித்து சுற்றுப்புற சுகாதார வசதியுடன் வைத்துக் கொள்ள வேண்டியது ஆகிய வற்றையும் குழு வலியுறுத்தி "சிபாரிசு" செய்துள்ளது. கைதிகளுக்காக சிறைகளில் சிறிய தொழில்களைத் துவக்கலாம்.

கைதிகளுக்கு வாரத்திற்கு ஒருமுறை புலால் (மாமிச) உணவு வழங்கவேண்டும். கைதிகளுக்காக பத்திரிகை நடத்தலாம். தண்டனைக் காலத்தில் சிறையில் வேலை செய்து சம்பாதிக்கும் திட்டத்தை விரிவுபடுத்தலாம்.

கைதிகளுக்கு பொழுது போக்குக்காக சினிமா காட்ட ஒவ்வொரு சிறையிலும்திரைப் படக் கருவி வாங்கவேண்டும் என்று இக்குழு சிபாரிசு செய்துள்ளது.

## தண்டவாளத்தில் நாசவேலை

செங்கற்பட்டு, ஆக. 24— தண்டவாளத்தின் மீது சில ஸ்லீப்பர் கட்டைகள் வைக்கப்பட்டிருந்ததன் காரணமாக சென்னை—திண்டுக்கல் பார்ஸல் பாஸஞ்சர் ரெயில் நேற்றிரவு படாளம், கருங்குழி இடையே நிறுத்தப்பட்டது. ஆனல் விபத்து எதுவும் நடக்கவில்லை. தண்டவாளத்தின்மீது வைக்கப்பட்டிருந்த அந்த ஸ்லீப்பர் கட்டைகள் அகற்கப்பட்ட பிறகு, ரெயில் புறப்பட்டுச் சென்றது.

## "தயவுப் பெரு நெறி"

(சுவாமி சரவணனந்தா)

(அருட்பிரகாச வள்ளலார் காட்டிய சமரச சுத்த சன்மார்க்க கொள்கை விளக்கம்)

### 45. தயவு ஒளியில் அருட்பெருஞ்ஜோதி அகவல் விளக்கம்

(25)

49. சச்சிதா னந்த தனிப்பர வெளியெனும்
50. அச்சியல் அம்பலத் தருட்பெருஞ்ஜோதி

இயற்கை உண்மையும், இயற்கை விளக்கமும் இயற்கை இன்பமும் உடைய அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் அனுபவம், புறத்திருந்து அடைய முயன்ருல் ஒருபோதும் முடியாது! புறவாழ்வில் பெறுகின்ற புலன் இன்பம் நிலைப்பதல்ல. சீக்கிமே கெட்டு ஒழிந்துபோம். இதுபோல், அகப்பர வெளியில் ஆழ்ந்து, தன்னை மறந்து, அனுபவிக்கின்ற சுகமும், நிலைப்பதல்ல, உயிர் ஒடுங்க சூனியமாய் மறைந்துபோம்.

சத்தாகிச் சித்தாகி ஆனந்தமாகிச் சதா நிலையாய்த் திகழ்ந்து கொண்டுள்ள பரம் பொருள், ஒப்பற்ற, பிறர் எவராலும் அடைதற்கரிய, பரவெளியில் விளங்கிக் கொண்டுள்ளார். இந்த உண்மையை அவரே அகமிருந்து உணர்ந்துவதும், நாமாய் நமது அறிவாய் இருந்து உணர்கின்றது ஆம். ஆகையால், நாம் உண்மையில் புறத்திருக்கின்றவர்கள் அல்ல! அகத்தில்தான் இருக்கின்ருேம். நமக்கு அந்த சச்சிதானந்த வாழ்வு அகவுரிமைய! அபக்குவத்தால இந்த உண்மை இன்பங்கொண்டுவாழாது, பொய்யான புலனின்பத்தில் திளைத்துத் துன்பத்தில் அழிந்துபோய்க் கொண்டிருப்பது எவ்வளவு அறியாமை! அது திருவருட் சம்மதம் அல்ல.

(தொடரும்)

## ரயில்வேயில் திருட்டு: 64 பேர் கைது

புதுடெல்லி, ஆக. 24— ரெயில்வே போர்டின் மத்திய குற்றப் பிரிவு ஸதாபனம் சமீபத்தில் நடத்திய 6 சோதனைகளின்போது ரூ. 7.5 லட்சம் பெறுமான திருடு போன ரெயில்வே சாமான்கள் மீட்கப்பட்டன. இந்தச் சோதனைகளின்போது 64 குற்றவாளிகளும் திருட்டு சாமான்களை வாங்கியவர்களும் கைது செய்யப்பட்டனர்.

ரெயில்வே பார்சல்களில் திருடுபோவதை கட்டுப்படுத்துவதற்காகவும் அதன்மூலம் நஷ்ட ஈடு கோரிக்கைகளைக் குறைக்கவும் மேற்கொள்ளப்பட்ட விசேஷநடவடிக்கையையொட்டி இந்தச் சோதனைகள் நடத்தப்பட்டன.

## ஹிப்பிகளுக்கு முடிவெட்ட கட்டணம் 5 ரூபாய்

சென்னை, ஆக 24—ஹிப்பி போல நீண்ட முடிவளர்ப்பவர்களுக்கு முடிவெட்ட ரூ. 5 கட்டணம் வாங்குவது என்று தென்னிந்திய மருத்துவகுல சவரத் தொழிலாளர் சங்க கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

கடந்த 3 ஆண்டு காலமாக ஹிப்பிபோல நீண்ட முடி வளர்க்கும் நாகரிகத்தால் சவரத் தொழிலாளர்கள் தங்கள் வருமானத்தில் 50 சதவீதத்தை இழந்து வருகிருர்கள். இந்த நிலைக்கு பரிகாரம் காணும் வகையில் வருகிற செப்டம்பர் மாதம் 1-ந் தேதி முதல் ஹிப்பிபோல முடி வளர்த்திருப்போருக்கு முடி வெட்ட கட்டணமாக ரூ. 5 வசூலிக்கவேண்டும் என்றும் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

கூட்டத்திற்கு சங்க தலைவர் கணபதி தலைமை தாங்கினர். இறுதியில் செயலாளர் மாரியப்பன் நன்றி கூறினர்.

## மத்திய ஊழியர்களுக்கு பஞ்சப்படி உயர்வு: தலைவர்கள் வரவேற்பு

புதுடெல்லி, ஆக. 24—மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு புதிய பஞ்சப்படி உயர்வு அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதன்படி ஒவ்வொரு ஊழியருக்கும் ரூ 35 முதல் ரூ. 100 வரை அதிகம் கிடைக்கும். அரசாங்கத்தின் இந்த முடிவை தொழிலாளர் தலைவர்கள் வரவேற்றுள்ளனர்.

பஞ்சப்படி உயர்வு முடிவை கூட்டு ஆலோசனை அமைப்பில் மத்திய சர்க்கார் ஊழியர் பிரதிநிதிகள் கூட்டத்தில் அறிவிக்கப்பட்டது. இக்கூட்டம் நிதி மந்திரி சுப்பிரமணியம் தலைமையில் நடந்தது.

இம் முடிவினல் சர்க்காருக்கு ரூ. 285 கோடி கூடுதல் செலவாகும். பிராவிடண்ட் பண்டில் சேர்க்கப்படும் பாக்கியும் இதில் அடங்கும்.

இந்தக் கூடுதல் கிராக்கிப் படியினல் முழு நிதி வருஷத்துக்கு மொத்தம் ரூ. 235 கோடி செலவாகும்,

பஞ்சப்படி உயர்வு சம்பந்தமாக அரசாங்கம வெளியிட்ட அறிக்கை வருமாறு:—

1. உபயோகிப்பாளர் விலை குறியீட்டெண்ணின் சராசரி 282 புள்ளிவரை கூடுதல் கிராக்கிப்படி ஏற்கனவே அனுமதிக்கப்பட்டிருக்கிறது. மூன்ருவது சம்பளக் கமிஷன் சிபாரிசு செய்திருந்த திட்டத்தை யொட்டி. சராசரி விலைவாசி புள்ளி 312-ஐ எட்டும்வரை கூடுதல் கிராக்கிப்படி 5 தவணைகள் தரவேண்டியுள்ளது.

2. இவ்வாறு அவ்வப்போது கொடுக்கப்படவேண்டிய கூடுதல் கிராக்கிப்படித் தொகைகளில்50 சதவிகிதம், 1924-ம் வருட கூடுதல் ஊதிய (கட்டாய டெபாசிட்) சட்டத்தை யொட்டி டெபாசிட்டில்வைக்கப்படும்.

3. எஞ்சியுள்ளதில் ஆகஸ்டு 31ந் தேதி வரையுள்ள காலத்துக்கான பாக்கித் தொகை பிராவிடண்ட் நிதியில் சேர்க்கப்படும். செப்டம்பரிலிருந்து ஆரம்பமாகும் காலத்துக்கு இது வழக்கமான சம்பளத்துடன் ரொக்கமாகத் தரப்படும்.

4. ஆகஸ்டு இறுதி வரையுள்ள காலத்துக்கான பிராவிடண்ட் நிதிக கணக்கில் சேர்க்கப்படும் விசேஷ டிபாசிட்டுகளை, 1977 மார்ச் இறுதி வரை திரும்பப்பெற முடியாது. ஆனல், மற்ற விஷயங்களுக்கு, மற்ற பிராவிடண்ட் நிதி டிபாசிட்போல பாவிக்கப்படும். அதற்குப் பிறகு மாமூலான பிராவிடண்டு நிதி தொகைகளுடன் இணைக்கப்பட்டு, வழக்கமான பிராவிடண்ட் நிதி விதிகளின்படி நடத்தப்படும்.

5. 1975 ஜனவரியில் அனுமதிக்கப்பட்ட 3 தவணைகள் சம்பந்தமாக டிசம்பர் வரையிலுமான காலத்துக்காகசேர வேண்டிய பாக்கிகளை ஊழியர்கள் விரும்பும் பட்சத்தில் திரும்பப் பெறலாம்.

ஆனல், இந்தத்தொகையை எவ்வளவு அதிக காலத்துக்கு பிராவிடண்ட் நிதி கணக்கிலேயே நீடித்துவைத்திருக்க முடியுமோ, அவ்வளவு அதிக காலத்துக்கு நீடித்து வைக்குமாறு ஊழியர்களை சர்க்கார் கேட்டுக்கொள்கிறது. இந்தத் தொகைகளையும் மாமூலான பிராவிடண்ட் நிதியுடன் இணைத்து விடலாம் என்று ஊழியர்கள் முடிவு செய்தால், அவையும் இணைத்துவிடப்படும் என்று அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

நேற்றைய கூட்டத்தில் நிதி மந்திரி சுப்ரமண்யம், தொழிலாளர் நல மந்திரி கே. வ. ரகுநாத ரெட்டி, பாதுகாப்பு உற்பத்தி இலாகா துணை மந்திரி ராம் நிவாஸ் மிர்தா, உதவி தபால் தந்தி மந்திரி ஜகந்நாத பகாடியா ஆகியோர் வந்திருந்தனர்.

ஊழியர் தரப்பில் எஸ் எம் பானர்ஜி, எஸ். கே. வியாஸ், ஜே பி சௌபே, சௌதரி ரகுவீர்சிங், ஓ. பி. குப்தா, ஆர். எல். பதக், ஆர். என். சர்மா, பிரியகுப்தா ஆகியோர் வந்திருந்தனர்.

### தலைவர்கள் சமமதம்

கிராக்கிப்படி பற்றிய மத்திய சர்க்காரின் முடிவை நிதி மந்திரி சுப்பிரமணியம இந்தக் கூட்டத்தில்அறிவித்தார். பொது விவாதத்துக்குப் பிறகு ஊழியர் தரப்பினர் தங்கள் சமமதத்தை தெரிவித்தனர்.

ஊழியர் தரபபுத் தலைவர்களான எஸ். எம், பானர்ஜி எம். பி.யும் ரகுவீர் சிங்கும சர்க்கார் முடிவுகளை வரவேற்றனர்.

புதியமுடிவால்சர்க்காருக்கு ஏற்படும் கூடுதல் செலவு ரூ. 285 கோடி. 1974—75-ம் வருடத்துக்கான பாக்கியில் ஒரு பகுதியும் இதில் சேரும். இந்த ரூ. 285 கோடியில் ரூ. 143 கோடி கட்டாய டெபாசிட்டில் போடப்படும் ரூ. 84 கோடி பிராவிடண்ட் நிதி கணக்கில் சேர்க்கப்படும். 1975 செப்டம்பரிலிருந்து 1976 மார்ச் வரைக்குமான காலத்தில் ரூ. 58 கோடி ரொக்கமாகத் தரப்படும்.

## எவ்வளவு கிடைக்கும்

ஆரம்ப அடிப்படைச் சம்பளம் ரூ. 196 பெற்றுவரும் ஒரு பியூனுக்கு இதுவரை ரூ. 70.60கிராக்கிப்படிகிடைத்து வந்தது. இனி அது ரூ. 106.60 ஆகும். அதாவது கூடுதல் தொகை ரூ. 35.

ஆரம்ப அடிப்படைச் சம்பளம் ரூ. 260 ஆக உள்ள லோயர் டிவிஷன் குமாஸ்தாவுக்கு இதுவரை கிடைத்து வந்த கிராக்கிப்படி ரூ. 93.60; இனி கிடைக்கப் போவது ரூ. 139-10; அதாவது கூடுதல் தொகை ரூ. 45-50.

அடிப்படைச் சம்பளம் ரூ. 330 உள்ள அப்பர் டிவிஷன் குமாஸ்தாவுக்கு இதுவரை கிடைத்து வந்த கிராக்கிப் படி ரூ. 108, இனிகிடைக்கப் போவது ரூ. 158. கூடுதலாக கிடைப்பது ரூ. 50.

ரூ. 800-ம் அதற்கு மேலும் சம்பளம் வாங்குபவர்களுக்கு கூடுதலாக ரூ. 100 கிராக்கிப் படி கிடைக்கும்.

## பல்லவனில் நஷ்டம்: ஈடுகட்ட சீரமைப்பு

சென்னை, ஆக. 24— பல்லவன் போக்குவரத்துக் கழகத்தில் ஏற்படும் நஷ்டத்தை ஈடுகட்ட போக்குவரத்து துறை திருத்தி அமைசகப்படுகிறது.

இப்போது அரசாங்க போக்குவரத்துத் துறையாக இயங்கிக் கொண்டிருக்கும் எக்ஸ்பிரஸ் பஸ்கள் செப்டம்பர் 15 முதல் பல்லவன் போக்குவரத்துக் கழகத்தில் இணைக்கப்படும் அதற்குப் பிறகு அரசாங்க போக்குவரத்து துறை இருக்காது.

போக்குவரத்துத்துறை அமைச்சர் ராமச்சந்திரன் இதை நேற்று நிருபர்களிடம் அறிவித்தார்.

பல்லவன் போக்குவரத்துக் கழகம் இவ்வகையில் மாற்றியமைக்கப்பட்டபின், அதற்கு மூன்று டைரக்டர்கள் இருப்பர். ஒருவர் சென்னை தலைமை அலுவலகத்திலும் வெளியூர் பஸ்களுக்காக காஞ்சிபுரத்தில் மற்றெருவரும், எக்ஸ்பிரஸ் பஸ்களுக்காக திருச்சியில் மூன்ருவது டைரக்டரும் இருப்பார்கள்,

பல்லவன் போக்குவரத்துக் கழகத்துக்கு இப்பொழுது வருஷத்துக்கு ஒரு கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படுகிறது. ஆனல், எக்ஸ்பிரஸ் பஸ்கள் ரூ. 2 கோடி லாபம் சம்பாதிக்கின்றன. பல்லவன் போக்குவரத்துக் கழகத்தில் எக்ஸ்பிரஸ் பஸ்களையும் சேர்ப்பதன்மூலம் அதன் நஷ்டம் ஈடு செய்யப்படும் என எதிர்பார்க்கப்படுகிறது.

### டீசலை மிச்சப்படுத்தினல் போனஸ்

டீசல் எண்ணெய் வகையில் மற்றெருசிக்கன ஏற்பாட்டையும் கொண்டுவர அரசு உத்தேசித்துள்ளது. டீசல் எண்ணெய் உபயோகத்தில் சிக்கனம் செய்யும் பஸ் டிரைவர்களுக்கு அவர்கள் மிச்சம் பிடிப்பதில் மூன்றுல் ஒருபங்கு தொகை தரப்படும். டிரைவர்கள் ஜாக்கிரதையாக உபயோகிப்பதன் மூலம் டீசல் எண்ணெயில் நிச்சயம் சிக்கனம் காண முடியும் என்று அரசு நம்புகிறது.

# மலையாளத்துக்கும் தமிழுக்கும் பொது லிபி: தமிழக மந்திரி யோசனை

சென்னை, ஆக. 24—தமிழுக்கும், மலையாளத்துக்கும் பொதுலிபி ஒன்றை ஏற்படுத்தலாம் என்று தமிழக போக்குவரத்துத்துறை அமைச்சர் ராமச்சந்திரன் யோசனை கூறினார்.

சென்னையில் உள்ள ஆசான் நினைவு கழகத்தின் 10-வது ஆண்டுவிழாவுக்கு ராமச்சந்திரன் தலைமை வகித்தார்.

மொழிகள் ஓரளவுக்கு ஒருமைப்பாட்டை உருவாக்குகின்றன. ஆகையால் பல மொழிகளுக்கு இடையேயும பொது லிபியை உண்டாக்கலாம்.

இந்தவகையில் தமிழக—கேரள அரசுகள் இரண்டு மொழிகளுக்கும் இடையே ஒரு பொது லிபியை ஏற்படுத்த நடவடிக்கை எடுக்கலாம் என்று ராமச்சந்திரன் கூறினர்.

இதனல் இரு மாநிலங்களிலும் உள்ள மக்கள் மேலும் நெருக்கமாக வாய்ப்பிருக்கிறது என்று அவர் தெரிவித்தார்.

ஆசான் பெயரில் பள்ளி நடத்துவது அவருக்கு பொருத்தமான நினைவுச் சின்னமாகும் என்றும் அவர் கூறினர்.

பள்ளிக் கூடத்துக்கு ரூ. 3 லட்சம் செலவில் கட்டப்பட்ட புதிய கட்டடத்தை கேரள போக்கு வரத்து துறை அமைச்சர் கோவிந்தன் நாயர் திறந்து வைத்தார்.

பள்ளியில் புதிய கலை அரங்கு ஒன்றை அமைக்க கேரள பொதுப்பணித்துறை அமைச்சர் திவாகரன் அடிக்கல் நாட்டினர்.

டாக்டர் எஸ். கே. நாயர் வயலார் ரவி எம். பி. மற்றும் பலரும் விழாவில் கலந்து கொண்டனர்.

விழா இறுதியில் எம். பி. தாமோதரன் நன்றி கூறினர்.

## குத்து சண்டை பார்த்தவர்: விலா எலும்பு நொறுங்கி மரணம்

சென்னை, ஆக 24—குத்துச் சண்டையை ரசித்துப் பார்த்தவர் விலா எலும்பு நொறுங்கி பரிதாபகரமாக மரணமடைந்தார்.

இது குறித்து விவரமாவது: கடந்த 14-ம் தேதி போரூரில் குத்துச்சண்டை நடந்தது. டிக்கெட் வாங்காத பலர் அப்போது மதில் மீதும், மரத்தின் மீதும் ஏறி நின்று ஓசியில் சண்டையைப் பார்த்தனர்.

ஒரு மரக் கிளையில் ஏராளமானேர் ஏறி நின்றதால் கிளை ஒடிந்து கீழே விழுந்தது. இதனல் துரைசாமி என்ற 30 வயது வாலிபரின் விலா எலும்பு நொறுங்கியது. தலையிலும் பலத்த காயம் ஏற்பட்டது.

துரைசாமியை உடனே ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். நேற்று இரவு துரைசாமி ஜெனரல் ஆஸ்பத்திரியில் பரிதாபமாக மரணமடைந்தார்.

வங்காள தேஷில்

## வானொலி மூலம் மீண்டும் கீதை ஒலிபரப்பு

கல்கத்தா, ஆக. 24—வங்காள தேஷ் வானொலியில் பகவத் கீதையிலிருந்தான பகுதிகள் மீண்டும் ஒலிபரப்பப்படுகின்றன.

சமீபத்தில் நடந்த புரட்சியின்போது பகவத்கீதை ஒலிபரப்பு நிறுத்திவைக்கப்பட்டிருந்தது.

ரவீந்திர நாத்தாகூரின் பாடல்களும், கவிஞர் நஸ்ருல் இஸ்லாமின் பாடல்களும் வங்காள தேஷ் வானொலியில் மீண்டும் ஒலிபரப்பப்படுகின்றன.

## இன்சுலேட்டர் ஊழியர் கூட்டம்

சென்னை, ஆக. 24—போரூர் டபுள்யூ. எஸ். இன்சுலேட்டர் தொழிற்சாலையில் கேட் கூட்டம் குசேலர் தலைமையில் நாளை 25-ம் தேதி பகல் 2 மணிக்கு நடைபெறும்.

## பல ஆயிரம் "குமுதம்" ஏடுகள் பறிமுதல்

மதுரை, ஆக 24—சனிக்கிழமையன்று மதுரை ரெயில்வே ஸ்டேஷனில் பாண்டியன் எக்ஸ்பிரஸில் வந்த 'குமுதம்' வாரப் பத்திரிகை பிரதிகள் சுமார் 30ஆயிரத்தை மதுரை போலீசார் கைப்பற்றினர். ரெயிலிலிருந்து இறக்கப்பட்டவுடன் பார்சல் கைப்பற்றப்பட்டது. இப்பத்திரிகையில் கேள்வி பதில் பகுதியில் அரிசி ஏற்றுமதி பேர ஊழல் நீதி விசாரணை பற்றி ஏதோ இருந்ததாகக் கூறப்படுகிறது.

திருச்சியிலும குமுதம் வாரப் பத்திரிகையின் இவ்வார பிரதிகள் இங்கு போலீசாரால் கைப்பற்றப்பட்டன. திருச்சி நகரில் சுமார் 19000 பிரதிகளும் பொன்மலையில் சுமார் 6000 பிரதிகளும கைப்பற்றப்பட்டதாகக்கூறப்படுகிறது.

திருச்சி மாவட்டத்தில் வினியோகிக்கப்படுவதற்காக வந்த 23,500 குமுதம் பிரதிகளும் கைப்பற்றப்பட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

செங்கற்பட்டு மாவட்ட ஆத்தூர் குமுதம் ஏஜெண்டிடமிருந்து 12 குமுதம் பிரதிகளைப் போலீசார் கைப்பற்றினர்.

செங்கற்பட்டு ரெயில்நிலைய புத்தக ஸ்டாலுக்கு வந்த குமுதம பிரதிகளை அதிகாரிகள் ஆராய்ந்தனர். கேள்வி பதில் பகுதியில் ஆட்சேபகரமான பகுதி நீக்கப்பட்டிருந்ததால் அவை கைப்பற்றப்படவில்லை எனத் தெரிகிறது.

## சென்னையில் தெலுங்கு மாநாடு நடத்த திட்டம்

சென்னை, ஆக. 24—ஆந்திர மாநிலம் உருவானதன் ஆண்டு விழாவையொட்டி சென்னை நகரில் இவ்வாண்டு நவம்பரில் அகில இந்திய தெலுங்கு மாநாடு ஒன்றை நடத்தலாம் என்று ஆந்திர கல்வி மந்திரி கிருஷ்ணராவ் தெரிவித்துள்ளார்.

சென்னையில் சென்னபுரி ஆந்திர மகாசபா சார்பில் பிரகாசத்தின் 103-வது பிறந்த தினவிழா நடந்தது. அதில் கலந்துகொண்டு பேசுகையில் அவர் இவ்வாறு கூறினார்.

சென்னையிலும் நகரைச் சுற்றிலுமுள்ள தெலுங்கு கல்வி அமைப்புகளுக்கு கட்டிடம் கட்டுவதற்காக ஆந்திர அரசு உதவுமென்றும் அவர் கூறினர்.

## மொத்த விலைக் குறியீட்டெண்

புதுடெல்லி, ஆக. 24—அனைத்துப் பொருட்களின் அதிகாரப்பூர்வமான மொத்த விலைக் குறியீட்டெண், இந்த ஆண்டு ஜூன் மாதத்தில், 0.3 சதவிகிதம் குறைந்து 312.3-ஆக மாறியது. கடந்த ஆண்டின் இதே மாதத்தோடு ஒப்பிடுகையில் இது 2.1 சத விகிதம் அதிகமாகும்.

உணவுப் பொருட்களின் விலை குறியீட்டெண் பசிலனை மாதத்தில் 0.3 சதவிகிதம் குறைந்து 370.1 ஆக மாறியது.

'மதுபானம்,' 'யந்திரங்கள், போக்குவரத்துசாதனங்கள்' பிரிவுகளின் விலைக் குறியீட்டெண்கள் மே மாத நிலைகளாகிய முறையே 215.2, 263.9-விருந்து மாறவில்லை.

புகையிலைப் பிரிவின் விலைக் குறியீட்டெண், 0.5 சத விகிதம் அதிகரித்து 322 ஆக உயர்ந்தது.

எரிபொருள், மின்சக்தி, மசகெண்ணெய் பிரிவின் விலை குறியீட்டெண், 0.2 சத விகிதம் அதிகரித்து 323.7 ஆக மாறியது.

## மேலும் பல பகுதிக்கு டிரங்க் தொடர்பு

புதுடெல்லி, ஆக. 24—அடுத்த மூன்றுண்டுகளில் மேலும் 50 மார்க்கங்களில் நேரடி டிரங்க் தொடர்பு வசதி ஏற்படுத்த தபால் தந்தி இலாகா முடிவு செய்திருக்கிறது. தற்போது 60 மார்க்கங்களில் இந்த வசதி இருந்து வருகிறது.

ஹைதராபாத், போபால், நாக்பூர், திருவனந்தபுரம், புவனேஸ்வர் ஆகிய முக்கிய நகரங்களில் நேரடி டிரங்க் தொடர்பு வசதி ஏற்படும். குறிப்பிட்ட காலத்தில்எல்லா மாநிலத் தலைநகரங்களிலும், முக்கிய நகரங்களிலும் இந்த வசதி ஏற்பட்டுவிடும்.

## சட்டசபை விதிகளை எளிமையாக்க தில்லான் யோசனை

டெல்லி, ஆக. 24—நெருக்கடி நிலை உள்ளதால் அரசாங்கம் தனது உடனடிப்பணிகளை நிறைவேற்ற உதவும் வகையில் சட்டசபைகளின் விதிமுறைகளை எளிமையாக்க வேண்டும் என்று மக்கள்சபை சபாநாயகர் தில்லான் கூறினர்.

டெலலியில சபாநாயகர்களின் 2 நாள் மாநாடுநேற்று துவங்கியது. இந்த மாநாட்டைத் துவககி வைத்துப் பேசுகையில் தில்லான் இவ்வாறு கூறினர்.

அவர் பேசும்போது கூறியதாவது;—

எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய விளைவுகளை முன் கூட்டியே ஊகித்து, நிர்வாகத்தை சுறுசுறுப்பாக இயக்க வேண்டிய பொறுப்பு சட்டமன்றங்களுக்கு உண்டு.

நெருக்கடி நிலை அமுலில் உள்ள இந்த நேரத்தில் இந்த கடமை அதிகமாகிறது.

அரசாங்கத்தின் கவனம் வேறு எந்த திசையிலும்திரும்பாமல் அதன் கடமையை செய்ய சட்டமன்றங்கள் அரசுக்கு உறுதுணையாக இருக்க வேண்டும்.

நாம் மிக நெருக்கடியான நேரத்தை கடந்துகொண்டிருக்கிறோம். கடந்த சில மாதங்களில் எதிர்பாராத பல முக்கியமாறுதல்கள் நாட்டில் ஏற்பட்டன.

பல சோதனைகளை, சவால்களை நாம் சந்தித்தபோதிலும் எந்தவித கெடுதலும் ஏற்பட்டுவிடவில்லை. அதற்கு மாறுக முன்னைவிட உறுதியுடனும் ஒற்றுமையுடனும் செயல்படுகிறோம்.

இவ்வாறு தில்லான்கூறினர்.

## அந்நிய செலாவணி மோசடி: 10பேர்கைது

புதுடெல்லி, ஆக. 24—அனுமதி இல்லாமல் அந்நிய செலாவணியை வாங்குவதிலும், விற்பனை செய்வதிலும் ஈடுபட்டிருந்ததாக கூறப்படும் 10 பேர் அந்நியச்செலாவணி சேமிப்புச் கடத்தல் தடுப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டுள்ளதாக அதிகாரபூர்வ வட்டாரங்கள் தெரிவித்தன.

இவர்களிடமிருந்து ஆட்சேபகர தஸ்தாவேஜுகள் கைப்பற்றப்பட்டுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டது.

கைதானவர்களில் 7 பேர் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள்.

## நாளைய நிகழ்ச்சி

குழந்தை எழுத்தாளர் சங்கம்: கவிமணி நூற்றாண்டுவிழா: தலைமை; எஸ். மகராஜன் சிறப்புரையாற்றுவார்; டி. வா. ஜகந்நாதன், அ. பாலசுச்சந்திரன் ராஜேஸ்வரி நடராஜன்; இடம்: மாவட்ட மத்திய நூலகச் சிறுவர்பகுதி அரங்கம், மாம்பலம்.

## வாலிபர் மரணம்: காரணம் என்ன?

சென்னை, ஆக. 24—தங்கசாலையைச் சேர்ந்த கணேசன் என்ற 24 வயது வாலிபர் திடீரென்று நேற்று மரணமடைந்தார்.

நேற்று இரவு 11-30 மணிக்கு இவரை ஜெனரல் ஆஸபத்திரியில் சேர்த்தார்கள், 20 நிமிடத்துக்கெல்லாம் அவரது உயிர்பிரிந்தது. கணேசன் விஷம் குடித்திருக்கக்கூடும் என்று கூறப்படுகிறது. யானைக்கவுனி போலீசார புலன் விசாரித்துவருகின்றனர்.

## பொறியியல் கார்ப்பொரேஷன் புதிய தலைவர்

புதுடெல்லி, ஆக, 24—ராஞ்சியில் உள்ள கனரக பொறியியல் கார்ப்பொரேஷனின் தலைவர் நிர்வாக டைரக்டராக கே. எம். கினி பதவி ஏற்றுக்கொண்டுள்ளார். அவர் இக்கார்ப்பொரேஷனின் நிர்வாக டைரக்டராக 1973, ஆகஸ்ட் 16 முதல் இருந்து வருகிறார்.

இக்கார்ப்பொரேஷனின் பதவி ஏற்பதற்கு முன் ஸ்ரீ கினி கல்கத்தாவிலுள்ள ப்ரெஸ்த்வட் நிறுவனத்தின் நிர்வாக டைரக்டராகப் பதவி வகித்தார். 1970 அக்டோபர் முதல் 1972 செப்டம்பரில் ராணுவத்திலிருந்து மேஜர்-ஜெனரலாக ஒய்வு பெறும்வரை, அவர் ஆவடி டாங்க் தொழிற்சாலையின் ஜெனரல் மானேஜராக இருந்தார்.

## பறவையைச் சுட்டார்: குண்டு தாக்கி சிறுவன் மரணம்

பெங்களூர், ஆக 24—ஒருவர் பறவைகளை நோக்கிச்சுட்டபோது வீட்டுக்குள் உட்கார்ந்திருந்த 13 வயதுச் சிறுவன் அக்குண்டு தாக்கி இறந்தான்.

இச் சம்பவம் கர்நாடகாவில் கன்னங்கி என்னுமிடத்தில் நடந்தது.

கிருஷ்ண நாயக் என்பவர் பறவைகளை சுட்டு வீழ்த்துவதற்காக துப்பாக்கியால் சுட்டார். அப்போது துப்பாக்கியில் இருந்து கிளம்பிய குண்டுகளில் ஒன்று தனது வீட்டில் உட்கார்ந்திருந்த நாகசாரி என்னும் இளைஞனின் தலையில் பாய்ந்தது. அவன் அங்கேயே சுருண்டு விழுந்து இறந்தான்.

இதுசம்பந்தமாக ஒரு வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

## சென்னையில் வெளி நாட்டு பெண்கள் 2 பேர் கைது

சென்னை, ஆக. 24—சிங்கப்பூர் செல்வதற்காக வெள்ளிக்கிழமையன்று மீனம்பாக்கம் விமான நிலையத்திற்கு வந்த பிரிட்டிஷ் பெண் மணி ஒருவரிடமிருந்து, 35 ஆயிரத்து 700 ரூபாய் இந்திய நோட்டுகள் கைப்பற்றப்பட்டன. அப்பெண்ணின் கைப்பையில் அந்த நோட்டுகள் மறைத்து வைக்கப்பட்டிருந்தன

இதே தினத்தில் சிங்கப்பூரிலிருந்து விமானம் மூலம் சென்னைக்கு வந்திறங்கிய மற்றொரு பெண்ணிடமிருந்து 6069 ரூபாய் மதிப்புள்ள 102 கிராம் எடை கொண்ட தங்க நகைகள் கைப்பற்றப்பட்டன. அப்பெண் தமது கைக்குட்டையில் இந்த நகைகளைக் கட்டி கைடபையில் மறைத்து வைத்திருந்தார், இந்த நகைகள் தம்மிடம் இருப்பதாக சுங்க இலாகா அதிகாரிகளிடம் அவர் தெரிவிக்கவில்லை.

இவ்விரு பெண்களும் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளனர். புலன் விசாரணை நடைபெறுகிறது.

## ஆந்திராவில் 51 அதிகாரிகள் கட்டாய ஓய்வு

ஹைதராபாத், ஆக. 24—ஊழல் திறமையின்மைக் காரர்களை கட்டாயமாக ஓய்வு பெறச் செய்து களை எடுக்கும் புதிய சர்வீஸ் விதிகளின் கீழ் ஆந்திராவில் இவ்வாரம் 51 அதிகாரிகளுக்கு கட்டாய ஓய்வு அளிக்கப்பட்டது.

## ஊழலை விசாரிக்க தனி ராணுவ கோர்ட்: வங்காளதேஷ் அறிவிப்பு

டாக்கா, ஆக 24— ஊழலை விசாரிக்க விசேஷ ராணுவ கோர்ட் அமைக்கப்படும் என்று வங்காளதேஷ் ஜனாதிபதி அறிவித்தார்.

ஊழல் குற்றவாளிகளுக்கு மரண தண்டனை விதிக்கப்படும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

இது சம்பந்தமாக வங்காள தேஷ் அரசு வெளியிட்ட அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது!—

ராணுவ சட்டத்தின்படி ராணுவ கோர்ட்டுகள், ஆரம்ப விசாரணை கோர்ட்டுகள், அப்பீல் விசாரணை கோர்ட்டுகள் ஆகியவற்றை அமைக்க, அதிபர் முஸ்தாக் அகமதுவுக்கு முழு அதிகாரம் அளிக்கட்பட்டு இருக்கிறது.

உதவி ஜனாதிபதி, மந்திரிகள், பாராளுமன்ற உறுப்பினர்கள், பெரிய அதிகாரிகள் தொழிற்சங்கத் தலைவர்கள், சாதாரண அரசு ஊழியர்கள் உள்பட யார் குற்றம் செய்தாலும், அவர்கள் இந்த கோர்ட்டுகள் முன்பு நிறுத்தப் படுவார்கள்.

இந்த வழக்குகளில் சட்ட கவுன்சில் ஆலோசனை தெரிவித்தாலொழிய குற்றம் சாட்டப்பட்டவர்கள் சார்பில் எந்த வக்கீலும் ஆஜர் ஆக முடியாது.

இந்த புதிய ராணுவச் சட்ட விதிகளை துணை போலீஸ் சூப்பிரண்டு அல்லது அதற்கு கூடுதல் அந்தஸ்துள்ள அதிகாரிகள், மேஜர் அல்லது அதற்கு கூடுதல் அந்தஸ்துள்ள அதிகாரிகள் அமுல் நடத்துவார்கள்.

துப்பாக்கி முதலிய ஆயுதங்கள், வெடி மருந்துகள் வைத்திருப்பது போன்ற தேச விரோத செயல்கள், சட்ட விரோதமான முறையில் வீடு கார் போன்ற சொத்துக்களை சம்பாதித்து வைத்திருப்பது; தேசத்துரோகம், சதி, மிரட்டல், தவருன முறையில் செல்வாக்கைப் பயன்படுத்துவது லஞ்ச ஊழல் புரிவது முதலிய குற்றங்களுக்கு அதிக பட்சம தூக்கு தண்டனை விதிக்கப்படும்.

மற்றும நாடு கடத்தல், 14 ஆண்டு கடுங்காவல் ஜெயில் ஆகியதண்டனைகளும, குற்றங்களின் தன்மைக்கு, ஏற்றபடி விதிக்கப்படும்.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டு உள்ளது.

## பட்டாசு தொழிலுக்கு கட்டுப்பாடு வராது

சென்னை, ஆக. 24—பட்டாசு, வாணத் தொழில்களுக்கு கட்டுப்பாடுகள் அல்லது தடை எதுவும் விதிக்க உத்தேசிக்கப்படவில்லை என்று தமிழ்நாடு அரசு நேற்று வெளியிட்டுள்ள பத்திரிகைக் குறிப்பு ஒன்றில் தெளிவு படுத்தியுள்ளது.

அத்தொழிலுக்கு சர்க்கார் கட்டுப்பாடு அல்லது தடை விதிக்கக்கூடுமென்று வதந்தி பரவியதையடுத்து சர்க்கார் மேற்கூறியவாறு தெளிவு படுத்தியுள்ளது.

# வங்காள தேஷில் முன்னுள் பிரதமர்கள் திடீர் கைது

கல்கத்தா, ஆக 24—வங்காளதேஷில் முன்னுள் துணை ஜனாதிபதி நசுருல் இஸ்லாம், முன்னுள் பிரதமர் மன்சூர் அலி, மற்றொரு முன்னுள் பிரதமர் தாஜுதீன் அகமது உட்பட 26 முக்கிய தலைவர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இவர்கள் ராணுவச் சட்ட விதிகளின் கீழ் கைது செய்யப்பட்டனர்.

வருமானத்துக்குப் பொறுத்தமற்ற வகையில் ஏராளமாக சொத்து சேர்த்ததாகவும், சமூகவிரோத செயல்களில் ஈடுபட்டதாகவும், சட்ட விரோத வழிகளில் சொத்துக்களைப் பறித்துக் கொண்டதாகவும் இவர்கள் கைது செய்யப்பட்டுள்ளதாக வங்காள தேஷ் ரேடியோ அறிவித்தது.

முன்னுள் துணை ஜனாதிபதி, இரு முன்னுள் பிரதமர்கள் மட்டுமல்லாமல், பல முன்னுள் மந்திரிகள், எம். பி.க்கள் ஆகியோரும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

### முன்னுள் மந்திரிகள் கைது

முன்னுள் தொழில் மந்திரி காமருசமான்; முன்னுள் வெளிவிவகார மந்திரி அப்துஸ்சமத் ஆஜாத்; முன்னுள் தகவல்துறை மந்திரி கோர்பான் அலி ஆகியோர் இவ்விதம் கைது செய்யப்பட்டுள்ளனர்.

வங்காளதேஷில் ராணுவச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டதைத் தொடர்ந்து இவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டனர்.

கைதான முன்னுள் பிரதமர் தாஜுதீன், வங்காளதேஷின் போரின் போது அமைக்கப்பட்டிருந்த சுதந்திர வங்காளதேஷ் அரசில் பிரதமராக இருந்தவர். அவர் முஜிபுர் ரகிமானின் முக்கிய சகாவாக இருந்து வந்தார்.

முஜிபுர் மந்திரி சபையில் தாஜுதீன் நிதி மந்திரியாக இருந்து வந்தார். எனினும் 1974-ல் அவர் மந்திரி பதவியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.

### வீட்டுக்காவல்

எட்டு நாட்களுக்குமுன்னர் வங்காள தேஷில் திடீர் புரட்சி நடந்ததிலிருந்து தாஜுதீன் வீட்டுக்காவலில் வைக்கப்பட்டிருந்தார். நேற்று காலை வங்காளதேஷ் துருப்புகள் அவருடைய வீட்டுக்கு வந்து அவரைக் கைது செய்து ராணுவ ஜீப்பில் அழைத்துச் சென்றனர்.

கிரேக்க நாட்டில்

## முன்னுள் ஆட்சி தலைவருக்கு மரண தண்டனை

ஏதன்ஸ், ஆக 24—கிரேக்க நாட்டில் முன்னர் ராணுவ ஆட்சியின் தலைவராக இருந்த ஜார்ஜ் பாபடோபவுலசுக்கும் அவருடைய இரு நெருங்கிய சகாக்களுக்கும் ஏதன்ஸ் கோர்ட்டில் மரண தண்டனை விதிக்கப்பட்டது.

1967ம ஆண்டில்ராணுவப் புரட்சி நடத்தி ஜனநாயகத்தை ஒழித்துக் கட்டியதற்காக அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது.

எனினும் பின்னர் கிரேக்க அரசாங்கம் விடுத்த ஓர் அறிவிப்பில் இந்த மூவருக்கும் விதிக்கப்பட்ட மரண தண்டனை நிறைவேற்றப்படமாட்டாது என்று அறிவித்தது.

## நிலப்பிரபு ஆதிக்கம்: திட்டத்துக்கு உறுப்பினர் கருத்து

சென்னை, ஆக. 24—கிராமங்களில் விவசாயப் பொருளாதாரத்தின் மீது நிலப்பிரபுக்களின் ஆதிக்கம் இன்னமும் பலமாயிருக்கிறது. இதனல் நில வசதிகளை முழுமையாகப் பயன்படுத்தி விவசாயத்தை சரிவர நிர்வகிக்க முடியாமலிருக்கிறதென்று திட்ட கமிஷன் மெம்பர் பி. சிவராமன் கூறினர்.

சென்னை நிர்வாகிகள் சங்கம் கூட்டிய ஒரு மாநாட்டில் அவர் பேசினர்.

எல்லா விவசாயிகளும் தொழில் நுணுக்கத்தைப் பயன்படுத்திக்கொண்டு பயனடைந்திருக்கிறர்கள். ஆனல் ஒரு சிலரே புதிய முறைகளைக் கைக்கொண்டுள்ளனர். பெரிய விவசாயிகள் உள் குத்தகைக்காரர்களை நியமித்துவிடுவதால் அவர்கள் போதிய அளவு முதலீடு செய்வதில்லை; உழுபவனுக்கு நியாயமான லாபத்தின் மூலம ஊக்கம் பிறப்பதில்லை என்று சிவராமன் மேலும் கூறினர்.

# திரை உலகம்

"பாட்டும் பரதமும்" படத்தில் சிவாஜி கணேசன், ஜெயலலிதா.

## ஏழை மாணவன் மீது காஞ்சனா காதல்

மாணிக்கம் கல்லூரியில் படிக்கும் ஏழை மாணவன். அவன் தாய் தங்கத்துடன் ஒரு குடிசையில் வசிக்கிறான்.

மாணிக்கம்மீது பெரும் பணக்காரர் மூப்பனாரின் ஒரே மகள் ஜானகிக்கு காதல்.

ஒருநாள் —

காதலனின் குடிசைக்கு ஜானகி வருகிறாள். மாணிக்கம் தன் காதலியை தாய் தங்கத்திற்கு அறிமுகப் படுத்தி காப்பி கொடுக்கச் சொல்கிறான்.

தங்கம் உள்ளே சென்று ஒரு தம்ளரில் காப்பி கொண்டு வந்து கொடுக்கிறாள். தங்கம், தனது காதலன் மாணிக்கத்திற்கும் காப்பிகொண்டு வந்துகொடுக்கும்படிவற்புறுத்துகிறாள்.

வேறு வழியின்றி உள்ளே சென்ற தங்கம் காலி தம்ளர் ஒன்றைக் கொண்டு வந்து மகன் மாணிக்கத்திடம் கொடுக்கிறாள்.

மாணிக்கம் நிலைமையைப்

(5-ம் பத்தி பார்க்க)

## முத்துராமன், ஸ்ரீகாந்த் கடும் மோதல்

கீதாவுக்கு அண்ணனாக மட்டுமின்றி தந்தையாக, தாயாகஎல்லாமுமாக இருந்து பாஸ்கர்தான் வளர்த்தான்—திருமணமும் செய்துவைத்தான். கணவன் வீட்டிற்குச் சென்ற தங்கை வாழாமல் அண்ணன் வீட்டிற்கே திரும்பி வந்துவிடுகிறாள். பாஸ்கருக்கு ரத்தம் கொதித்தது.

தீவிரமான முடிவுடன் மைத்துனர் வீட்டை நோக்கி செல்கிறான்.

மைத்துனனை நேரில் சந்தித்ததும்எப்படிப் பிரச்சினையைக் கூறுவது என்று யோசிக்கின்றான்.

கடைசியில் வியாபாரம், தொழிற்சாலையை விசாரிக்கிறான். பின்னர் மெல்ல எதற்காக வந்தானோ அதைச் சொல்ல ஆரம்பிக்கிறான்.

"என்ன மாப்பிள்ளை...என் தங்கை கீதா இவ்வளவு சீக்கிரத்தில் விவாகரத்து கேட்கும் நிலைக்கு ஆளாக்குவீர்களென நான் நினைக்கவில்லை" என்கிறான்.

"அதுக்கு நானும்தயாராக இருக்கிறேன்". என்று மைத்துனன் ராமநாதன் கூறுகிறான்.

பாஸ்கருக்கு அடக்கி வைத்திருந்த ஆத்திரம் தலை தூக்குகிறது.

"அப்போ சும்மா இருக்காமல் எதுக்கு கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க?" என்று சத்தம் போடுகிறான்.

"இப்ப என்ன கெட்டுப் போச்சு! விவாகரத்து செஞ்சுட்டு தாராளமாக வேறு யாரையாவது கல்யாணம் கட்டிக்கொள்ளட்டும். வேணும்னா, நானே ஒரு நல்ல மாப்பிள்ளையா பார்த்துக் கொடுக்கிறேன்" என்று நிதானமாக ராமநாதன் கூறுகிறான்,

ஆத்திரம் தாங்கமுடியாமல் ராமநாதனின் சட்டையைப் பிடித்து இழுத்து பாஸ்கர் ஓங்கி அறைகிறான்.

அப்போது—

"ராமு" என்று குரல் கேட்கிறது. இருவரும் திரும்பிப் பார்க்கின்றனர்.

ராமநாதனின் தாய் ஜானகி அம்மாள் சண்டையை வளர விடாமல் தடுக்கிறாள்.

எஸ். எஸ். கே. பிலிம்ஸ் "வாழ்ந்து காட்டுகிறேன்" படத்துக்காக வாகினி ஸ்டுடியோவில் இக்காட்சி படமாக்கப்பட்டது.

ராமநாதனாக முத்துராமனும், பாஸ்கராக ஸ்ரீகாந்தும் தாயாக எம். என். ராஜமும் நடித்தனர்.

கிருஷ்ணன், பஞ்சு டைரக்ட் செய்கின்றனர். ஒளிப்பதிவை மாருதிராவ் கவனிக்கிறார்.

மற்றும் பத்மபிரியா, மனோரமா, சுருளிராஜன், எம். பானுமதி, ஒருவிரல் கிருஷ்ணாராவ், விஜய சந்திரிகா ஆகியோர் நடிக்கின்றனர்.

தென்னரசு கதைக்கு தங்கப்பதக்கம் மகேந்திரன் திரைக்கதை வசனம் எழுதுகிறார்.

கண்ணதாசன் பாடல்களுக்கு விஸ்வநாதன் இசை வமைக்கிறார்.

எஸ். எஸ். கருப்பசாமி தயாரிக்கிறார்.

'அண்ணயா விளக்கு' படத்தில் மு. க. முத்து.

## வி. கே. ராமசாமி உயிரை சுஜாதா காப்பாற்றினர்

நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையாக இருக்கிறார் கோடீஸ்வரர் சிதம்பரம் பிள்ளை. எப்போது உயிர் பிரியும், அவருடைய திரண்ட சொத்துக்களைப் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்று அவரது உறவினர்கள் வீட்டில் தங்கியிருக்கின்றனர்,

சிதம்பரம் பிள்ளையின் வளர்ப்பு மகனான சுந்தரம் தனக்கே சொத்துக்கள் முழுவதும் வரவேண்டுமென்று பல முயற்சிகள் செய்கிறான். உயிரோடு போராடும் சிதம்பரம் பிள்ளைக்கு ஆக்சிஜன் வைக்கப்பட்டிருக்கிறது.

ஒரு மனிதன் சாவின் சந்நிதானத்தில் இருக்கும்போது முடிவு நெருங்கி விட்டது என்கின்ற நிலையில் கூட காசு ஆசை கொண்டவர்களிடம் இரக்கத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அப்போதும் அவர்களைத் தொலைத்துவிட்டு நாம் அடைந்துவிட மாட்டோமா என்ற வெறிதான் இருக்கிறது காப்பாற்ற வேண்டும் என்கின்ற உணர்ச்சியையே காண முடியவில்லை.

சிதம்பரம் பிள்ளைக்கு ஆக்சிஜன் செலுத்தப்பட்டுக் கொண்டு இருப்பதைத் துண்டித்துவிட்டால் அவரதுஉயிர் போய்விடும் என்ற திட்டத்தோடு சுந்தரம் வருகிறான்.

அதை வெட்டப்போகும் சமயத்தில் சாந்தி சத்தம் போடுகிறாள், சுந்தரம் ஓடிவிடுகிறான். சிதம்பரம் பிள்ளையின் உயிர் காப்பாற்றப்படுகிறது.

இக்காட்சி சித்ரலல்தா தயாரிக்கும் 'வேடந்தாங்கல்' படத்திற்காக மெஜிஸ்டிக் ஸ்டுடியோவில் படமாக்கப் பட்டது.

சிதம்பரம் பிள்ளையாக வி. கே. ராமசாமியும், சுந்தரமாக ஜெய் கணேசும், சாந்தியாக சுஜாதாவும் நடித்தனர்.

மற்றும் எம். ஆர். ஆர். வாசு, மனோரமா, டி. ஆர். ராமச்சந்திரன், ஏ. கருணாநிதி, பி. ஆர். வரலட்சுமி, மாஸ்டர் சேகர், ஷகிலா ஆகியோரும் நடிக்கின்றனர்.

ஏ. சண்முகசுந்தரம் தயாரிக்கிறார்.

சிவகுமார் ஜெயசித்ராவிடம்.

# நாடக உலகம்

## நினைத்ததென்ன?

இந்துமதி பைன் ஆர்ட்ஸ் குழுவினரின் "நினைத்ததென்ன?" சமூக நாடகத்திற்கான பூஜை சென்னை வெங்கட நிவாசம் பள்ளியில் நடந்தது.

வி. எஸ். கிருஷ்ணன் தலைமை வகித்தார். நடிகர், நடிகையரை சேக்காலை சேதுமணி அறிமுகம் செய்துவைத்தார். ராகினி குத்துவிளக்கு ஏற்றினார.

நாடகத்திற்கு எஸ். பாலாஜி கதை வசனம் எழுதுகிறார். ஆர். வி. ஆயர்தாசன் டைரக்ட் செய்கிறார்.

சேலம் ராமசாமி, செல்லமணி, ஜெயராமன், ரகோத்தமன் முகிலன், கதிரவன், பாஸ்கர் ஸ்ரீதர், சிவலிங்கம், ராகினி ஆகியோர் நடிக்கின்றனர்.

## ஜெயசுதா நடிக்கும் 'ரௌடி ரங்கம்மா'

வீணாலயாவின் ரௌடி ரங்கம்மா நாடகத்தில் ஜெயசுதா நடிக்கிறார்.

சுப்பையா, பிரபாகரன், அன்பழகன், சீனிவாசன், ராஜாராமன், ஜெகநாதன், மோகன்ராம், கோபி குமார், பிரபுஜி, புகழ்மணி பூர்ணிமா விஜயலட்சுமி, வஜ்ரராஜ் ஆகியோர் நடிக்கின்றனர்.

மூகர்கோவில் அய்யாவு கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார். கோலாலம்பூர் பிரபாகர் இசையமைக்கிறார்.

## சபலம்

சித்ர பிரியா மூவிஸ் தயாரிக்கும் 'சபலம்' துவக்க விழா தமிழக முதல்வர் கருணாநிதி தலைமையில் சென்னை வாகினி ஸ்டுடியோவில் நடைபெற்றது.

இந்தப் படத்திற்கு கதை வசனம் எழுதி ஏ. எஸ். பிரகாசம் டைரக்ட் செய்கிறார்.

முத்துராமன், ஸ்ரீகாந்த், தேங்காய் சீனிவாசன், செந்தாமரை, சுஜாதா, ஸ்ரீபிரியா, ஏ. சகுந்தலா ஆகியோர் நடிக்கின்றனர்.

ஆலங்குடி சோமுவின் பாடல்களுக்கு விஸ்வநாதன் இசையமைக்கிறார். ஜி. ஆர். நாதன் ஒளிப்பதிவைக் கவனிக்கிறார்.

துவக்க விழாவன்று வாணி ஜெயராம் பாடிய பாடல் ஒன்று பதிவு செய்யப்பட்டது

## பொறியியல் கருவிகள் ஏற்றுமதி 50 சத விகிதம் உயர்வு

புதுடெல்லி, ஆக 24—1974-75-ம் ஆண்டில் சுமார் 353 கோடி ரூபாய் மதிப்புக்கு பொறியியல் கருவிகளை (என்ஜினியரிங் கருவிகளை) இந்தியா ஏற்றுமதி செய்துள்ளது.

இதுமுந்தியஆண்டுஏற்றுமதி மதிப்பை விட 121 கோடியே 73 லட்சம் ரூபாய் கூடுதலாகும். அதாவது சுமார் 50 சதவிகித அளவுக்கு இந்த ஏற்றுமதி அதிகரித்துள்ளது.

கச்சாப் பொருட்கள் தட்டுப்பாடு, மின்வெட்டு, கப்பலில் ஏற்றி அனுப்புவதில் ஏற்பட்ட கஷ்டம் போன்ற பல முட்டுக் கட்டைகள் இருந்தபோதிலும், இந்த அளவுக்கு பொறியியல் கருவிகள் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளது மிகப் பெரிய சாதனையாகும். 1975-76-ம் ஆண்டிலும் இப்பொருட்கள் ஏற்றுமதி தொடர்ந்து அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இந்த ஏற்றுமதி அதிகரிப்புக்கு காரணம், பொறியியல் கருவிகளின் ஏற்றுமதி விலைவிகிதங்கள் அதிகரிப்பினால் மட்டும் அல்ல. அதிக அளவுக்கு இத்தகைய பொருட்களும் ஏற்றுமதியாகியுள்ளன. உதாரணமாக, யந்திரங்கள் மற்றும் போக்குவரத்து சாதனங்கள் அதிகமாக 60 சதவிகிதத்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அவற்றின் ஏற்றுமதி விலைவிகிதம், 8 சதவிகிதம் தான் அதிகரித்தது.

பொறியியல் கருவிகள் ஏற்றுமதி ஒரே சீராக அதிகரித்துள்ளது. 1974 ஆம் ஆண்டில் ஏப்ரல் முதல் 1975 ஆம் ஆண்டு பிப்ரவரி வரை உலோக செய் பொருட்கள் ஏற்றுமதி மதிப்பு 67 கோடியே 80 லட்சம் ரூபாயாக இருந்தது. இதற்கு முந்தைய ஆண்டின் இதே காலத்திய ஏற்றுமதி மதிப்பு 40 கோடியே 81 லட்சம் ரூபாய்தான். அதாவது இப்பொருட்கள் ஏற்றுமதி 67 சதவிகிதத்திற்கு அதிகரித்துள்ளது.

### மின் யந்திரங்கள்

மின்சார யந்திரங்கள் தவிர பாக்கி யந்திரங்கள் ஏற்றுமதி மதிப்பு 102 சதவிகிதத்திற்கு அதிகரித்துள்ளது. பரிசிலனைக் காலத்தில் 78 கோடியே 20 லட்ச ரூபாய்க்கு இப்பொருட்கள் ஏற்றுமதியாயின. இதற்கு முந்திய ஆண்டின் ஏற்றுமதி மதிப்பு 33 கோடியே 80 லட்சம் ரூபாய்தான். மின் யந்திரங்கள் ஏற்றுமதி 109 சதவிகிதத்திற்கு அதிகரித்துள்ளது. பரிசிலனை காலத்தில் 50 கோடியே 30 லட்சம் ரூபாய்க்கு இவை ஏற்றுமதியாயின. போக்குவரத்து சாதனங்கள் ஏற்றுமதி மதிப்பு 29 கோடியே 80 லட்சம் ரூபாயிலிருந்து 55 கோடியே 30 லட்சம் ரூபாயாக, அதாவது 85 சதவிகிதம் அதிகரித்துள்ளது. மற்ற பொறியியல் சாதனங்கள் ஏற்றுமதி மதிப்பு 28 கோடியே 10 லட்சம் ரூபாயிலிருந்து 60 கோடி ரூபாயாக அதாவது 114 சதவிகிதம் உயர்ந்துள்ளது.

### இறக்குமதி செய்யும் நாடுகள்

குவைத், ஈராக், துபாய், சவூதி அரேபியா போன்ற நாடுகளுக்கு இந்தியப் பொறியியல் பொருட்கள் அதிக அளவுக்கு ஏற்றுமதி செய்யப் படும்.

செய்யப்பட்டுள்ளன ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டமைப்பு நாடுகள், பிரிட்டன், மேற்கு ஜெர்மனி ஆகியவற்றிற்கு கணிசமான அளவுக்கு பொறியியல் கருவிகள் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன.

ஆசிய ஆப்ரிக்க நாடுகளில் இந்தியப் பொறியியல் கருவிகளுக்கு அதிக கிராக்கி உள்ளது. மேற்கு ஆசிய நாடுகள் தொழில் திட்டங்கள் நிறுவுவது, அவற்றுக்கான ஆலோசனைகள் பெறுவது ஆகியவற்றிற்காக இந்தியாவின் உதவியை அடிக்கடி நாடுகின்றன.

வரும் ஆண்டுகளில் ஏற்படக்கூடிய பொறியியல் பொருட்கள் ஏற்றுமதி வேகத்தை தொடர்ந்து பராமரிக்க, மத்திய அரசு அண்மைக் காலத்தில் சில நடவடிக்கைகளை எடுத்துள்ளது. சில குறிப்பிட்ட நடுத்தர மற்றும் கனரக பொறியியல் சருவிகளை கப்பலில் ஏற்றுவதற்கு முன் சிப்பம் கட்டுவதற்காக முன்பணம் வழங்கும் விஷயத்தில் இறக்குமதித் தீர்வை வசூலிக்கப்பட மாட்டாது. இது சம்பந்தமாக, மாதிரித் தீர்மானங்கள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. தவணை முறையில் கடனைத் திருப்பி அடைவதற்காக ஏற்றுமதியாளர்கள் அனுப்பியுள்ள யோசனைகளை தொழில் அபிவிருத்தி பாங்கு கொடுக்கப்படும் கடன் வசதி, 90 நாட்களிலிருந்து 180நாட்களுக்கு நீட்டிக்கப்பட்டுள்ளது. தவணை முறையில் கடனைத் திருப்பிக் கொடுப்பது சம்பந்தப்பட்ட ஏற்றுமதிக் கொள்கை தளர்த்தப் பட்டுள்ளது. ஏற்றுமதி நடவடிக்கைகளில் ஈடுபடும் தொழில் பிரிவுகளுக்கு, உள்நாட்டு எ...கு ஒதுக்கீடு செய்வதற்கான நெறிமுறை சுலபமாக்கப்பட்டுள்ளது. இத்தகைய எக்கு உள்நாட்டில் கிடைக்காவிட்டால், வெளிநாடுகளிலிருந்து பிரத்தியேகமாகத் தருவிக்கப்படுகிறது.

### சோந்தி கமிட்டி

பொறியியல் பொருட்கள் ஏற்றுமதி சம்பந்தமான சோந்தி கமிட்டியின் அறிக்கை விஷயமாக மத்திய அரசு அண்மையில் சில முக்கிய தீர்மானங்களை மேற்கொண்டுள்ளது அந்தத் தீர்மானங்கள் வருமாறு:

(அ) மூலதனப் பொருட்கள் ஏற்றுமதி, முற்றிலும் ஆயத்த நிலை அடிப்படையிலான திட்டங்களுக்குரிய பொருள்களின் ஏற்றுமதி ஆகியவற்றிற்காக நிர்ணயிக்கப்பட்டுள்ள பண உதவி விகிதத்துக்கு ஒப்பந்தகால இறுதி வரை பாதுகாப்பு அளிக்கப் படும். மற்ற பொறியியல் சாதனங்கள் விஷயத்தில், 3 வருட காலத்திற்கு இந்த விகிதம் மாறாமல் இருக்க தகுந்த ஏற்பாடுகள் செய்யப் படும்.

(ஆ) விலை விகிதம் 10சதவிகிதம் அல்லது அதற்கு அதிகமாக உயர்த்தப்பட்டால், இந்த விலை உயர்ந்த திருத்தத் தேதிவரை ஏற்றுமதியாளர்கள் செய்துகொண்ட ஒப்பந்தங்கள் இந்த விலை உயர்வினால் பாதிக்காது. ஆனால் பணவீக்கம் காரணமாக, ஒப்பந்தத் தொகை அதிகரித்தால், அதற்கு அரசு பொறுப்பேற்காது.

(இ) கச்சாப் பொருட்கள் எக்கு, சிமெண்ட், மின்சக்தி உட்பட எல்லா வசதிகளும் இந்த ஏற்றுமதி தொழில் பிரிவுகளுக்கு கிடைப்பதற்காக அமைச்சரவைக்கு இடையே உயர்மட்ட கமிட்டியொன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது, ஏற்றுமதிக்காக, பரிசீலனை செய்யும்.

### புதிய நடவடிக்கைகள்

பாரசீக வளைகுடாப் பகுதியில் துறைமுகங்கள் விமான நிலையங்கள், நெடுஞ்சாலைகள், பாலங்கள், மருத்துவமனைகள், வீடுகள், போன்றவற்றை அமைப்பதற்கான திட்டப் பணிகளுக்கு இந்திய நிறுவனங்களுக்கு ஆர்டர்கள் பிடிப்பதற்காக, மத்திய அரசு சில நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. இந்தியாவிலுள்ள கட்டுமானப் பணி நிறுவனங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு கூட்டமைப்பு நிறுவனமாக மாற்றப்பட்டு வருகின்றன. வெளிநாட்டு திட்டப்பணிகளில் அவை கலந்துகொள்வதற்கு வசதி செய்து தரப்படுகிறது, வாகன் மற்றும் ரெயில் பெட்டி தயாரிப்பு தொழில் இந்தியாவில் வளர்ச்சியடைந்துள்ளதால், தென்கிழக்கு ஆசியா, மேற்காசியா, ஆப்ரிக்கா ஆகியவற்றிலுள்ள நாடுகளின் அபிவிருத்தித் திட்டங்களுக்கு இந்தியா தனது சேவையை அளித்து நல்ல லாபம் பெறலாம்.

தொழில்மயமான சில மேலை நாடுகளின் அபிவிருத்தித் திட்டங்களைச் செயல்படுத்துவதில் இந்தியா உதவி அளிக்கக் கூட வாய்ப்புக்கள் உள்ளன, கடந்த ஆண்டுகளில் இந்தியாவிலிருந்து வாகன்கள், ரயில் பெட்டிகள் ஆகியவற்றை ஏற்றுமதி செய்வதில், சில முட்டுக்கட்டைகள் இருந்தன. இந்த முட்டுக்கட்டைகள் யாவும் கண்டு பிடிக்கப் பட்டுள்ளன. இவற்றை நீக்கி ஏற்றுமதி நடவடிக்கையை ஊக்குவிக்க தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்த முட்டுக்கட்டைகள் யாவும் நீக்கப்பட்டுவிடுவதால் அதிகரித்து வரும் வெளிநாட்டு வாகன தேவையை இந்தியா பூர்த்தி செய்ய முடியும் என நம்பப்படுகிறது.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

புரிந்து கொண்டு காலி தம்ளரை வாங்கிக் கொண்டு, காப்பி சாப்பிடுவது போல் பாவனை செய்கிறான்.

தனக்கு நிறைய காப்பி யிருக்கிறது என்று சொல்லி மாணிக்கத்தின் தம்ளரை ஜானகி பறிக்கிறாள். அவன் கையிலிருந்த தம்ளர் கீழே விழுகிறது.

இதைக்கண்டு மாணிக்கமும் தாய் தங்கமும் அதிர்ச்சியடைகின்றனர். ஜானகி அவர்களது நிலைமையைப் புரிந்து கொள்கிறாள்.

கீழே விழுந்த காலி தம்ளரை எடுத்து, தன்னிடமுள்ள காப்பியில் பாதியை அதில் ஊற்றி மாணிக்கத்திடம் ஜானகி நீட்டுகிறாள்.

அவள் செய்கையைக்கண்டு மாணிக்கமும், தங்கமும் மகிழ்ச்சியடைகின்றனர்.

இக்காட்சி அம்பிகை ஆர்ட்ஸ் "உண்மை சொல்ல வேண்டும்" படத்திற்காக மெஜஸ்டிக் ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

மாணிக்கமாக முத்துராமனும் தங்கமாக எஸ். என். லட்சுமியும், ஜானகியாக காஞ்சனாவும், மூப்பனாராக மேஜர் சுந்தரராஜனும் நடித்தனர்.

கதை வசனம் டைரக்ஷன் பொறுப்புகளை பதுமை முகிலன் ஏற்றுள்ளார்.

# இன்றைய சினிமா

**சென்னை**

மேற்கு மாம்பலம் நேஷனல்: நீதிக்குப் பின் பாசம்

ராம்: பிரியா விடை

சரஸ்: அவன்தான் மனிதன்

நியூ எல்பின்ஸ்டோன்: தர்மக்ஷேத்ரா குருக்ஷேத்ரா

**குரோம்பேட்டை**

வெற்றி: அண்ணயா விளக்கு, Women by Night

**பல்லாவரம்**

லட்சுமி: இதயக்கனி

**தாம்பரம்**

எம். ஆர். தியேட்டர்: சவாலே சமாளி

நேஷனல்: மன்னவன் வந்தானடி

சித்ரா: மஜ்பூர் (இந்தி)

**கொளத்தூர்**

ஸ்ரீ குமரன்: யாருக்கும் வெட்கமில்லை

**திருக்கழுக்குன்றம்**

புவனேஸ்வரி: சிரித்து வாழ வேண்டும்

கன்னியப்பா: 'மயங்குகிறாள் ஒரு மாது'

## குடும்ப கட்டுப்பாடு: மாநில அரசுகளுக்கு கடிதம்

புதுடெல்லி, ஆக. 24—குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை வெகு தீவிரமாக அமுலாக்குவது அவசியம் என்று மத்திய சுகாதார, குடும்பக் கட்டுப்பாடு திட்ட இலாகா செயலாளர் ஜியான் பிரகாஷ் வலயுறுத்தினார். நான்காவது திட்டத்துடன் ஒப்பிடுகையில் ஐந்தாவது திட்ட காலம் முழுவதும் தொடர்ந்து இத்திட்டம் மிக உயர்ந்த திறனுடன் செயல்படுவது அவசியம் என்று அவர் கூறினர். இந்த ஆண்டிலேயே சென்ற ஆண்டைப் போல இரட்டிப்பு சாதனை செய்து முடிக்க வேண்டுமென்று அவர் மேலும் கூறினர்.

மாநில நிர்வாகத் தலைமைச் செயலாளர்களுக்கு அனுப்பியுள்ள கடிதம் ஒன்றில் அவர் 1975—76 ஆம் ஆண்டுக்கான இலக்குகள், பிறப்பு விகிதத்தை ஆயிரத்துக்கு 30 என்ற அளவுக்குக் கொண்டு வர வேண்டும் என்ற ஐந்தாவது திட்ட நோக்கத்துக்கு பொருந்தும் வகையிலேயே நிர்ணயிக்கபட்டுள்ளன என்று கூறியிருக்கிறார்,

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd. Editor in-charge: G. Dhanaraj.